Regd. No. 2975



# ஸ்ரீ ராமாநுஜன் -308

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM–631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

Released by Maran's Dog , Toronto, Canada



திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—எழ்பாரு
முய்ய அவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1974ஆம் பங்குனி மாத வெளியீடு

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்

# அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்

ப்ரமாதீச வருஷத்திய

# மீன விசாகோத்ஸவ பத்திரிகை

ஸ்ரீ ஸ்வாமியின் எண்பத்துமூன்ருவது திருநக்ஷத்ர பூர்த்தியை முன்னிட்டு

ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்

நாளது பங்குனிமீ 18உ (31—3—74) முதல்
பங்குனிமீ 27உ (9—4—74) வரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தானம், ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும். ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி ப்ரார்த்திக்கப் படுகிருர்கள்.

வேதபாராயண கோஷ்டி கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதி வலத்துடன் நடைபெறும்.

இங்ஙனம்,
ப்ரதிவாதி பயங்கரம் செல்வமணி என்கிற
ரங்கநாத தாஸன்.

காஞ்சீபுரம்,
22—3—74.

---

SRI KANCHI MAHA VIDWAN JAGADACHARYA SIMHASANADHIPATHI

# P. B. ANNANGARACHARYA SWAMI'S

## EIGHTYFOURTH BIRTH DAY CELEBRATIONS

The Eightyfourth Birth day of Sri Swami is being celebrated this year at his residence in Kanchi from 31—3—74 to 9—4—74. Vedas, Divya Prabandhams, Stotras and Rahasyas will be chanted. Procession of the Veda Goshti and lectures will also take place as usual.

*You are cordialy invited to attend,*

CHELLAMANI alias
**P. B. Ranganathacharya.**

Kanchipuram,
22—3—74.

[illegible]

# எனது இளமை நினைவுகள்

(முன் தொடர்ச்சி)

## மைஸூர் கஸ்தூரி ரங்காசார்ய ஸ்வாமியின் நினைவு

என்னுடைய வித்யார்த்திதசையில் மைஸூரில் பண்டிதரத்னமென்று ப்ரஸித்தரான ஸ்ரீமத் கஸ்தூரி ரங்காசார்யர் ஸ்வாமி திருமலை யாத்திரையாக எழுந்தருளினவர் காஞ்சீபுரிக்கும் விஜயம் செய்திருந்தார். அவரோடுகூட மைஸூர் அரசாங்கத்து அதிகாரிகளும் சிலர் வந்திருந்தார்கள். தேவப்பெருமாள் ஸந்நிதிக்குள் நடந்துவந்த சடகோப நிலய பாடசாலையில் ஒரு நாள் பரீக்ஷா ஸதஸ்ஸு நடத்தினார்கள். அப்பாடசாலையில் வாசிக்கிற வித்யார்த்திகளை மட்டுமல்லாமல் பிறவிடங்களில் வாசிக்கிற (ஸம்ஸ்க்ருத) வித்யார்த்திகளையும் வருவித்துப் பரீக்ஷை நடத்தினார்கள். அதற்கு நானும் போயிருந்தேன். உத்துங்கவித்யார்த்திகளைத் தனியாகவும் சிறுவகுப்பு வித்யார்த்திகளைத் தனியாகவும் உட்கார வைத்துப் பரீக்ஷை நடத்தி வருகிறார்கள். முராரி நாடகத்தில் பரீக்ஷை நடந்துகொண்டிருக்கிறது. அதில் முதல் அங்கத்தின் முடிவிலுள்ள "யந்நேத்ரைஸ்த்ரிபி ரத்யஸூயத ஸமம் வாநீரபாம்" என்கிற ச்லோகத்தில் ஒர் உத்தம வித்யார்த்தி பரீக்ஷை செய்யப்படுகின்றார்; அவர்க்கு ச்லோகமே உபஸ்திதியில்லை. அதனால் அவர் மிகவும் சிரமப்படுகிறார். அப்போது சிறுமாணாக்கர் திரளில் உட்கார்ந்திருந்த யான் "அதை நான் சொல்லுகிறேன்" என்றேன். அப்பாடசாலையின் தலைமையுபாத்யாயரான சாமா திருமலை தாதாசாரியர், அடியேன் ஏதோ விளையாட்டாகப் பேசுவதாக நினைத்து "சும்மா! வாயைமூடியிரு" என்று அதட்டினார். பரீக்ஷகரான கஸ்தூரி ஸ்வாமி "சொல்லப்பா! பார்ப்போம்" என்றார். உடனே யெழுந்து அந்த ச்லோகத்தைப் பூர்த்தியாகச் சொல்லி அர்த்தமும் தாத்பரியமும் விரியச்சொல்லி முடித்தேன். அப்போது "காவ்ய பாடம் வாசிக்கிற உனக்கு இந்த ச்லோகம் எப்படித் தெரிந்தது?" என்று கஸ்தூரி ஸ்வாமி கேட்டார். "என் க்ருஹத்தில் என் தகப்பனாரிடத்தில் பலபேர்கள் வாசிக்கிறார்கள்; அவர்களில் முராரி நாடகம் வாசிப்பவர்களுமுண்டு; அவர்கள் வாசிக்கும்போது நான் கூடவிருந்து கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம்; அதனால் தெரிந்தது" என்றேன். 'அவரவர்கள் வாசிக்கிற எல்லா க்ரந்தங்களிலும் நீ பரீக்ஷை சொல்லுவாயா?' என்று கேட்டார். "நிச்சயமாகச் சொல்ல முடியாது; அநேகமாய்ச் சொல்லுவேன்; கேட்டுப் பார்க்கலாமே" என்றேன். பிறகு மற்ற வித்யார்த்திகளை விட்டுவிட்டு என்னை மட்டும் விசேஷமாகப் பரீக்ஷித்தார்கள். அவர்கள் த்ருப்தியடையும்படியாகவே சொல்ல இயன்றது.

## தங்கக் காப்பு அண்ணா

பிறகு பரீக்ஷிதர்களுக்கு ஸன்மானம் செய்யும்போது ஒரு ரூ. இரண்டு ரூ. மூன்று ரூ. உத்தரீயம், புத்தகம்.........இப்படியாகக் கொடுத்தார்கள். அடியேனுக்கு இரண்டு பவுன் கொண்ட டாலர் ஒன்று கொடுத்தார்கள். அதைக்கொண்டு தாய் தந்தையர் எனக்குத் தங்கவளை செய்வித்துக் கரபூஷணம் போட்டார்கள். அதை யான் 26, 27 வயது வரையில் அணிந்துகொண்டிருந்தேன். அதனால் "தங்கக் காப்பு அண்ணா" என்றே எனக்குப் பெயர் வழங்கி வந்ததப்போது. காவ்ய நாடக

அலங்காரக்ரந்தங்களை எனக்கு மேல்வகுப்பினர்கள் வாசிக்கும்போதுகளில் உடனிருந்து கேட்டது, பிறகு அந்த க்ரந்தங்களையெல்லாம் தனியாகவும் வாசித்தது ஆகிய இவற்றால் அடியேனுக்கு காவ்ய—சம்பூ—நாடக அலங்கார க்ரந்தங்களின் உபஸ்திதி அதிகமாகவுண்டாயிற்று. இடையில் பலவருஷங்கள் அவற்றை ஸ்மரிக்கவும் ப்ரஸக்தியில்லாமலிருந்துங்கூட இற்றைக்கும் அவற்றின் உபஸ்திதியைப் பெரும்பாலுமுடையேன். இவ்விஷயத்தில் அடியேன் மூவரிடத்தில் தினந்தோறும் க்ஷணந்தோறும் உபகாரஸ்ம்ருதி செலுத்திக்கொண்டிருக்கிறேன்; 1. திருத்தகப்பனார்; 2. (மாத்வ) ராமசந்த்ராசார்; 3. அவருடைய ஸஹோதரர் வித்யாசார் ஆகிய இம்மூவரும் என்னுடைய நித்ய க்ருதஜ்ஞதா பாத்ரபூதர்கள். திருத்தகப்பனார் சொல்லிக்கொடுத்ததில் ஆச்சரியமில்லை; ராமசந்த்ராசாரும் வித்யாசாரும் புத்ரநிர்விசேஷமாகப் பாடங்கள் சொல்லிவைத்ததை நான் நினையாத க்ஷணமில்லை, அவர்களுடைய போதநாசக்தி நிகரற்றது. அவர்களை அடிக்கடி நினைக்கிறேன்.

## திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி நினைவுகள்

என்னுடைய இருபது பிராயத்தில் திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி ப்ரவசநவித்வானாக எழுந்தருளியிருந்தவர் சென்னைமாநகரில் ப்ரவசனங்கள் செய்யத் திருவுள்ளம்பற்றி அஸ்மத் மாதாமஹ ஜீயர்ஸ்வாமி நியமனம் பெற்றுப் போகலாமென்று காஞ்சிக்கு எழுந்தருளி ஸ்வாமி மடத்திலேயே நாலைந்துநாள் தங்கியிருந்தார். அந்த ஸ்வாமி ஒரு விலக்ஷணவ்யக்தி அப்போது அந்த ஸ்வாமியோடு அடியேனுக்கு மிகவும் நெருங்கின பரிசயம் ஏற்பட்டு அது இந்நிலையிலிருந்து வளர்ந்து அடிக்கடி அவரையுத்தேசித்து அடியேன் சென்னைக்கு விடைகொள்வதும், அடியேனையுத்தேசித்து அவர் காஞ்சிக்கு எழுந்தருள்வதுமாய் ஸந்நிகர்ஷம் ப்ரபலப்பட்டுவிட்டது. அந்த ஸ்வாமி சென்னை தங்கசாலைத் தெருவில் ஆஸ்தானமமைத்துக்கொண்டு இரண்டு மூன்று சாரிடிகளில் உபந்யாஸங்கள் ஸாதிக்கத் தொடங்கினார். அப்போது அடியேன் அடிக்கடி அங்குச் சென்றிருப்பேன். அந்த ஸ்வாமியின் நியமனத்தினால் அங்கே உபந்யாஸங்களும் செய்வேன். அவ்விடத்திலேயே ஸ்திரவாஸம் செய்யும்படி அவ்விடத்து பக்தர்கள் பலர் கேட்டுக்கொள்வர்கள்; அப்போது அடியேன் வித்யார்த்தி தசையிலேயிருப்பவனாதலாலும் நகரவாஸத்தில் ருசியற்றவனாதலாலும் அதற்குச் சிறிதும் இணங்கிற்றிலேன்.

## பண்டிட் லக்ஷ்மணாசார் ப்ரஸ்தாவம்

அப்போது அவ்விடத்தில் அதே வீதியில் பண்டிட் லக்ஷ்மணாசார் கீதையுபந்யாஸம் செய்து கொண்டிருந்தார்; பட்டப்பாஸ்வாமி அவ்விடத்தில் உபந்யாஸம் ஸாதிக்க ஆரம்பித்த பிறகு லக்ஷ்மணாசாருடைய கோஷ்டி குறையத் தொடங்கிற்று; பட்டப்பாஸ்வாமி ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளினால் ஜனங்களை ஆவர்ஜனம் செய்கிறாரென்று தெரிந்து கொண்ட லக்ஷ்மணாசார் தாமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் பரிசயத்தை ஸம்பாதித்துக் கொண்டு மறுபடியும் சென்னைக்கு வருவதாகச் சொல்லிப்போய் அப்படியே இரண்டு மூன்று வருஷகாலம் ஸ்வஸ்தானத்திலிருந்து கொண்டு சில ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர்களைத் துணைகொண்டு திவ்யப்ரபந்தத்தில் சிலசில பாகங்களைத் தாம் அதிகரித்து வியாக்கியானங்களையும் ஸேவித்து மறுபடியும்

(முதற்பதிப்பில் பக்கம் 224-ல்) இரண்டாவது பதிப்பில் பக்கம் 314-ல் ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி நியமனத்தையும் அங்கு ச்லோகத்தை நலேமற் பதிப்பித்திருக்கிறேன்.

ஏகாமேவ ஸுதாம் அஜ்ஜநமஹம் த்ரைலோக்ய பூர்ணப்ரதாம்
புஷ்ணபி ஸ்ம ரமாமிவ, அஹரதிமாம் ரக்தாந்த நேத்ரஸ் ஸ்வயம்,
காம்பீர்யாட்ய குடும்பிநீ ஜநிதஸத்புத்ரா யசோதாஹ்வயா
த்ருஷ்ட்வா ஹ்ருஷ்டமநா: ஸ்நுஷாம், விதநுயாத் வைவாஹிகம் வா க்ரமம்.

என்பதே அந்த ச்லோகம். ஸ்ரீ ஸ்வாமி நியமித்த மற்றொரு பாசுரமாவது—பெரியாழ்வார் திருமொழியிலேயே 5-3-6

எருத்துக் கொடியுடையானும் பிரமனு மிந்திரனும் மற்று
மொருத்தரு மிப்பிறவி யென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை
மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா மறுபிறவி தவிரத்
திருத்தி* உன்கோயில் கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலை யெந்தாய்.

இப்பாசுரத்திற்கு மொழிபெயர்ப்பாக விஜ்ஞாபித்த ச்லோகமாவது—

நேசாநோ வ்ருஷபத்வஜோ ந ச புநர் வேதா ந சேந்த்ரோ ந சாப்
யந்ய: கோபி ஜநோஸ்ய ஸம்ஸ்ருதி மஹா ரோகஸ்ய வேத்த்யௌஷதம்,
ஸ்வாமிந் வைத்யமணே மணிப்ரப! புநர்ஜந்மாபநீயாத மாம்
யுஷ்மந்மந்திர வாஸிநம் குரு ஹரே ஸ்ரீ காநநாத்ரி ப்ரபோ, என்பதாம்.

இதுவும் அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையில் முதற்பதிப்பில் (பக்கம் 406-ல் இரண்டாவது பதிப்பில் பக்கம் 493-ல்) முத்ரணம் பெற்றுள்ளது. இவ்விதமான ச்லோக மொழிபெயர்ப்புத் தொண்டை விசேஷமாகச் செய்துவந்தேன். திருவாசிரிய மேழுபாட்டையும் ஏழு தண்டகமாகவும், திருவெழுகூற்றிருக்கையைப் பெரியதொரு தண்டகமாகவும், சிறிய திருமடலையும் பெரிய திருமடலையும் ஆர்யையில் இருநூறு ச்லோகங்களாகவும் மொழிபெயர்த்துள்ளேன். இவை தவிர இக்கவைகளை வடிவெடுத்த பலநூறு பாசுரங்களை (ஏறக்குறைய ஆயிரம் பாசுரங்களை) ச்லோகமாக்கியுள்ளேன் இவையெல்லாம் முதலில் க்ரந்த லிபியில் அச்சிடப்பட்டு, பிறகு தேவநாகரலிபியில் விவரணத்தோடும் அச்சிடப்பட்டுள்ளன.

ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி ஸந்நிதியிலே யிருந்த ஆஸ்தான வித்வானொருவர் "கலையுங் கரியும் பரிமாவும்" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தை அதே யிசை நடையில் ஸம்ஸ்க்ருத ச்லோகமாக்கிச் சொல்லுவீரா? என்றார். அப்போதே திருநின்றவூரிலேயே உடனே விண்ணப்பம் செய்து கொண்டேன்.

பெரிய திருமொழி 1-5-1

கலையுங்கரியும் பரிமாவும் திரியுங்கானம் கடந்து போய்ச்
சிலையுங் கணையுந் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து
மலைகொண்டலை நீரணைகட்டி மதிள் நீரிலங்கை வாளரக்கர்
தலைவன்* தலைபத்தறுத் துகந்தான் சாளக்கிராம மடைநெஞ்சே. 2

(இப்பாட்டுக்கு மொழிபெயர்ப்பாக இந்த பிரசாசலடையில் விஜ்ஞாபித்த ச்லோகம்)

ஹரிணீ: கரிபிஸ் துரகைச்ச வ்யாப்தா மடவீம் அதியந் ஸந்
தநுஷா விசிகைஸ் ஸஸஹாயோ கதவாந் ஜயதாம் ரணபூமிம்,
கிரிபிர் ஜலதௌ க்ருதஸேது: தசவக்த்ர சிராம்ஸி தச வ்யலுநாத்
பகவாந் ஸஹி யத்ர விராஜதி தம் ஸாலக்ராமம் பஜ சித்த.

இந்த ச்லோகமும் அடியேனுடைய பெரியதிருமொழி ஸம்ஸ்க்ருதானுவாதத்தில் (ப்ருஹத்ஸூக்தாபரநாமதேய ஸ்ரீ பரகாலஸூக்திஸங்க்ரஹத்தில்) பக்கம் 24ல் காண்க.

சின்னகலியன் ஸ்வாமியின் க்ருபாப்ரசார ஹரிவாஹங்கள்

ரஹஸ்ய க்ரந்தங்களையும் ச்லோக ரூபமாக மொழி பெயர்க்கும்படி ஸ்ரீஸ்வாமி நியமித்தருளினதைச் சிரமேற்கொண்டு ஸ்ரீவசநபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி ஆகிய மூன்று ரஹஸ்யங்களையும் யதாவகாசம் இரண்டொரு மாதங்களில் ச்லோகமாக்கி முடித்தேன். அந்த ஸமயத்தில் ஸ்ரீமத் ஸ்வாமி (சின்ன கலியன் ஸ்வாமி) வடதேச யாத்திரை யெழுந்தருளியிருந்தார். எவ்விடத்தில் எழுந்தருளியிருக்கிருரோ அவ்விடத்தில் நேரே விடைகொண்டு இந்த ஸம்ஸ்க்ருத அநுவாதங்களை ஸ்வாமி ஸந்நிதியில் பூர்த்தியாக வாசித்துக் காட்ட வேணுமென்கிற குதூஹலமுண்டாயிற்று. அதுவரையில் அடியேனுக்கு வடதேசயாத்திரை ப்ராப்தமானதில்லை. அடியேனுக்கு பதரிகாச்ரம யாத்திரை மூன்று பர்யாயமும், ஹரித்வார் ஹ்ருஷிகேசம் வரையில் யாத்திரை இருபத்திரண்டு பர்யாயமும் ப்ராப்தமாகியிருக்கிறது. வடநாட்டு யாத்திரையிலெழுந்தருளியிருக்கின்ற சின்ன கலியன் ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே ஒரு பயணம் புறப்பட்டேன். அதுதான் அடியேனுடைய முதல்தடவையான வடநாட்டு யாத்திரை.

பாட்னநகரில் ஸ்வாமி ஸந்நிதிக்கு விடை கொண்டது

அப்போது சின்ன கலியன் ஸ்வாமி பாட்னவில் (Deegha Ghat) தீகா காட் டென்னுமிடத்தில் பரிஜந பரிவாரங்களோடும் பத்து வித்வான்களோடும் விசேஷச் சிறப்புடன் எழுந்தருளியிருக்கிருர். தீகாகாட் என்னுமிடத்தை நம் தேசத்தவர்கள் பலர் பார்த்திருக்கமாட்டார்களென்று நினைக்கிறேன். தீர்க்க கட்டம் என்பதே 'தீகா காட்' என வழங்கப்படுகிறதுபோலும். அங்கே பெருகுகின்ற கங்கை நாலு மைல் அகலமுள்ளது. ஸமுத்ர மென்னவேணுமே யொழிய நதி யென்னமுடியாது. அந்த கங்கையின் கரையில் பேரம்யமானதொரு ஹர்ம்யத்தில் ஸ்ரீ ஸ்வாமி யெழுந்தருளியிருக்கிருர். அவ்விடம் சென்று சேர்ந்து ஸ்ரீ ஸ்வாமி திருவடி வாரத்தில் ஒரு வாரம் வாழ்ந்திருந்தேன். ஆஸ்தான வித்வான்கள் பலருமங்கு ஸேவைஸாதிக்கிருர்கள். அந்த ஸந்நிவேசத்தை நினைக்கும்போதே அடியேனுடலம் புலகாங்கிதமாகிறது. அலையாருங்கடல்போல் முழங்கும் கங்கையை வாசலில் கண்டு கொண்டிருந்தாலும் பசி தோன்ருது. காலை மாலை வேளைகளில் ஸ்ரீ ஸ்வாமியின் உபயவேதாந்தப்ரவசனம் ஹிந்தியிலும், ஸம்ஸ்க்ருதத்திலும் ஆச்சரியமாக நடைபெறுகின்றது. சாதுர்மாஸ்ய ஸங்கல்பஸமயமது. "ஸ்வாமி நியமித்தருளினபடி மூன்று ரஹஸ்யங்களையும் ச்லோக ரூபேண மொழி பெயர்த்துக்கொண்டு வந்திருக்கிறேன். பூர்த்தியாகத் திருச்செவி

சாந்தியேயாக வேணும்" என்று விஜ்ஞாபித்தேன். காலை மாலை காலக்ஷேபத்தையும் நிறுத்தி இதையே வாசித்துக்காட்ட நியமனமாயிற்று. அங்குள்ளாரனைவரும் கூடியிருந்து கேட்கவேணுமென்றும் கட்டளை யிட்டருளியாயிற்று. ஏழெட்டு நாள் இவ்வரங்கேற்றமே போது போக்காக நிகழ்ந்தது.

அங்கே அரங்கேற்றப்பெற்ற அந்த ரஹஸ்யார்த்த ச்லோகமாலைகளுக்கு ஸ்ரீ ஸ்வாமி, "ரஹஸ்யரத்னமாலிகா" என்று பெயரிட்டருளி, இதை விரைவில் அச்சிட வேண்டியதென்றும் நியமித்தருளினார். தெலுங்கு லிபியில் மேலே தமிழ் மூலமும், கீழே ச்லோகமுமாக அச்சிடப்பட்டது. பிறகு கோஸர்ஜ ஸேட்டின் பௌத்ரனுடையதனது அச்சுக்கூடத்தில் தேவநாகரலிபியில் வெகு நேர்த்தியாக 2000 பிரதிகள் அச்சிடப்பட்டுள்ளது.

## திவ்யார்த்த தீபிகைக்குத் தடையும் விடையும்.

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை எழுதி வெளியிட ஆரம்பித்தது ஏறக்குறைய அறுபது வருஷமாகிறது. அப்போது மாதந்தோறும் 40 பக்கம் கொண்ட ஒவ்வொரு ஸஞ்சிகையாக வெளியிட்டுவந்தேன். (சென்னை M. R. கோவிந்தசாமியின் ஸம்பந்தம் நேரிடாதகாலம் அது.) ப்ரதிமாத ஸஞ்சிகையாக வெளியிட்டு வந்த காலத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி சின்ன கலியன் ஸ்வாமி ஸன்னிதிக்கும் அனுப்பி வந்தேன். ஸ்வாமி முதல் ஸஞ்சிகையைப் பூர்த்தியாகக் கடாக்ஷித்தருளி ஸாதித்த ஸ்ரீமுகத்தில் "இந்த வுரையை இவ்வளவோடு நிறுத்த வேணும். இவ்வுரையால் ஆசார்ய முகமாகக் காலக்ஷேபம் செய்து தெரிந்துகொள்ள வேண்டிய பூர்வாசார்ய வ்யாக்யானங்கள் உள்ளே அடங்கிப்போய்விடும். இந்த உம்முடைய உரை எல்லாருக்கும் ஸௌகர்யமாக விருப்பதால் இதையே பார்த்துக் கொள்வோமென்று பூர்வாசார்ய வ்யாக்யானங்களைத் தொடாமலேயிருந்து விடுவார்கள். ஆகவே பெரியாழ்வார் திருமொழி முதற்பத்தோடு இதை நிறுத்தி விடும்" என்று நியமித்தருளியிருந்தார். ஆனால் நிறுத்த முடியவில்லை. 350 பேர்களுக்குமேல் சந்தாதாரர்கள் சேர்ந்து முன் பணம் அனுப்பியிருந்தபடியால் தொடர்ச்சியாக நடத்தவேண்டியதாயிற்று. சின்ன கலியன் ஸ்வாமி ஸ்ரீமுகத்திற்கு ஏதோ பதில் எழுதிவிட்டு நான் தொடங்கின காரியத்தை நிறுத்தாமல் நடத்தியே வந்தேன். ஸ்வாமி ஸன்னிதிக்கும் மாதந்தோறும் ஸஞ்சிகை போய்க்கொண்டிருக்கிறது. சில மாதங்களுக்குப் பிறகு ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியிலிருந்து மறுபடியும் ஸ்ரீமுகம் கிடைத்தது. "உம்முடைய திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை ஸாமாந்யர்களுக்கு மட்டுமல்லாமல் உயர்ந்த பண்டிதர்களுக்கும் உபகாரகமாக இருப்பதால் இது அவச்யம் நடந்து வரவேண்டியதுதான். பூர்வாசார்யர்கள் தாமும் ஒன்றுக்குப் பல வ்யாக்யானங்கள் இட்டருளியிருப்பதுபோல இந்த வ்யாக்யானமும் ஒன்றாக இருக்கலாம். தளர்ச்சி யடையாமல் இந்த திவ்யார்த்த தீபிகையை விரைவில் பூர்த்தி செய்வது நலம்" என்று நியமனம் ஸாதித்தருளினபடி. முதலாயிரத்தின் தீபிகை முடிவுபெற்றுப் பெரிய திருமொழி தீபிகை நடந்துகொண்டிருக்கிற ஸமயத்தில் வானமாமலைக்கு விடைகொண்டு ஸ்ரீ ஸ்வாமியை ஸேவித்தபோதும் உவந்து பல வார்த்தைகள் அருளிச்செய்ய ப்ராப்தமாயிற்று.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யருடைய
எண்பத்து நான்காவது பிராயப் பிறப்புக்கு நினைவு மலரான

# ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணார்த்த ஸமுச்சயம்

## வேத ஸம்ஹிதையிலிருந்து சில விஷயங்கள்



### 1. வெள்ளி நாணயம் தக்ஷிணைக்குரியதன்று*

நமது யஜுர் வேதத்தில் முதல் காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் தொடங்கு வது "தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந்,தே தேவா விஜயமுபயந்த:" இத்யாதி. இங்கு அக்நியைப் பற்றின ஓர் உபாக்கியானம் ஓதப்படுகிறது. அதை பாஷ்யாநுஸாரேண விவரித்தெழுதுகின்றேன். தேவர்களும் அசுரர்களும் யுத்தம் செய்கையில் வெற்றி பெற்ற தேவர்கள் அசுரர்களிடமிருந்து முத்தும் மணியுமான சிறந்த பொருள்களைக் கொள்ளைகொண்டு அவற்றைக் காப்பாற்றும் பொருட்டு அக்நி தேவனிடம் வைத் தார்கள். மீண்டு மொருகால் நமக்குத் தோல்வி விளைந்தால் அப்போது இவை நமக்கு ஆபத்தனமாயிருக்கு மென்றெண்ணி வைத்தார்கள். அவற்றை அக்நிதேவன் தானே கொள்ளை கொள்ள வெண்ணி அப்பால் வெகிழத் தொடங்கினான். அதை யறிந்த தேவர்கள் அப்பொருள்களை மீட்டுக் கொள்ளவேண்டிப் பின் தொடர்ந்தோடி னார்கள். ஓடி பலாத்காரமாகப் பிடுங்கினபோது அக்நிதேவன் அழுதான். அதனால் அவனுக்கு ருத்ரனென்கிற பெயருமுண்டாயிற்று. அவன் அழுத கண்ணீர் கீழே விழுந்து அது வெள்ளியாக ஆயிற்று. கண்ணீரின் விகாரமான வெள்ளியானது தக்ஷிணைக்குத் தகாதது. எவன் யஜ்ஞத்தில் வெள்ளி நாணயத்தை தக்ஷிணையாகக் கொடுக்கிறானோ அவனுடைய இல்லத்தில் வருஷத்திற்குள் ரோதன நிமித்தமுண்டாம். ஆதலால் யஜ்ஞத்தில் வெள்ளி நாணயத்தை தக்ஷிணையாகக் கொடுக்கக்கூடாது.



மேலே விவரித்த வேத வாக்யத்தில் "ரஜதம் ஹிரண்யமபவத்" என்றும் "ரஜதம் ஹிரண்யம் அதக்ஷிண்யம்" என்று மிருக்கையாலே ரஜதமென்கிற வெள்ளி யும், ஹிரண்யமென்கிற பொன்னும் தக்ஷிணைக்கு அநர்ஹமென்று சிலர் சொல்லு வர்கள். அது தவறு. ஹிரண்யமென்பது தனத்திற்குப் பொதுவான வாசகம். 'ரஜதரூபமான தனம்' என்று அர்த்தமே யொழிய, வெள்ளியும் பொன்னும் என்று அர்த்தமன்று. இங்கு வித்யாரண்ய பாஷ்யபங்க்தி வருமாறு—"ரஜத ரூபம் தநம் அபவத்; அத்ர ஹிரண்ய சப்தஸ்ய தநஸாமாந்ய வாசித்வாத் ரஜதம் ஹிரண்யமிதி

அவிருத்தம்." என்று. பட்ட பாஸ்கரருடைய கருத்தும் இதுவே யாகும். வேதத்தில் "ஹிரண்யம் தக்ஷிணா" என்று நாலிடங்களில் வருகிறது; அங்கெல்லாம் ஸ்வர்ண மென்றே பொருள். இக்காலத்தவர்கள் பெரும்பாலும் ச்ராத்தத்திலுங் கூட நோட்டை [காகிதத்தை] வைத்து தக்ஷிணை கொடுப்பது ஒரு விதத்தில் நலமேயாம்.

## 2. பஞ்சம ஜாதி உண்டென்பதற்கு வேதத்தில் ப்ரமாணம்

முதல் காண்டத்திலேயே ஆறாவது ப்ரச்நத்தில் கடைசி யநுவாகத்தில் "யா தே ஜநேஷு பஞ்சஸு" என்று ஒரு வாக்கியம் ஓதப்பட்டுள்ளது. இங்கே ஜநசப்தத்திற்கு ஜாதியை அர்த்தமாக பாஷ்யம் செய்துள்ளார்கள். "ப்ராஹ்மணாதிஷு பஞ்சஸு வர்ணேஷு" என்றே பாஷ்யகாரர்களிருவரும் எழுதியுள்ளார்கள். இதனால் நான்கு ஜாதிக்கு மேற்பட பஞ்சம ஜாதியென்பது சாஸ்த்ரங்களில் சொல்லப் படவே யில்லை யென்று நவீனர்கள் கூறுவது நிராதார மென்றறியக் கடவது. "சத்வாரோ வர்ணா:" என்று பலவிடங்களிலும் வருவதுண்டு; அதை யாரும் அபலபிக்கமாட்டார்கள். அதனால் பஞ்சம ஜாதி யில்லை யென்றதாகாது. *

## 3. துர்ப்ராஹ்மணத்வமும் தத்பரிஹாரமும்

"யஸ்ய வேதச் ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸ வை துர்ப்ராஹ்மண:" என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ளது. வேத ஸம்பந்தமும் அக்நி ஸம்பந்தமுமில்லாமல் மூன்று தலை முறை கழிந்து விட்டால் துர்ப்ராஹ்மணனாய் விடுவன். ஒரு வைதிக கருமத்திற்கும் அவன் அர்ஹனல்லன்—என்று கூறப்பட்டுள்ளது. அந்த துர்ப்ராஹ்மணத்வத்தைப் போக்கிக்கொள்ள வேணுமென்று ஒருகால் ஒருவற்குத் தோன்றினால் அதற்கு வழியில்லையோ வென்ன, வழியுண்டென்கிறது இரண்டாவது காண்டத்தில் முதல் ப்ரச்நத்தில் பத்தாவது அநுவாகத்தின் தொடக்கத்தில். "ஆச்விநம் தூம்ரலலாமமாலபேத யோ துர்ப்ராஹ்மண ஸ்ஸோமம் பிபாஸேத்" இத்யாதியை வைதிகர்களிடம் உணர்க. .... .... .... .... *

## 4. விச்வருபனுடைய விசித்திரமான கதை

இரண்டாவது காண்டத்திலேயே ஐந்தாவது ப்ரச்னத்தின் தொடக்கம் விச்வருபாநுவாக மென்பது. இதில் ஒரு ஆச்சரியமான கதை சொல்லப்படுகிறது. (அதாவது) த்வஷ்டாவின் மகன் விச்வரூப னென்பவன் தேவர்களுக்குப் புரோஹிதன், அசுரர்களுக்கு மருமகன். அவனுக்கு மூன்று தலைகளிருந்தன. அவை ஸோமபானத்திற்கும் ஸுராபானத்திற்கும் சோறுண்பதற்குமானவை. அவன் பலர் முன்னிலையில் தேவர்களே ஹவிர்ப்பாகங் கொள்ளத் தகுந்தவர்கள் என்பன். மறைவில் அசுரர் பக்ஷமாகவே சொல்லுவன். இப்படி விருப்பேச்சுள்ள விவனை வதைக்க வெண்ணின இந்திரன் வஜ்ரப் படையினால் அவனது தலைகளை யறுத்திட்டான். அறுபட்ட அம்மூன்று தலைகளும் மூன்று பக்ஷிகளாக விழுந்தன. அதனாலுண்டான ப்ரஹ்மஹத்யாபாபத்தை இந்திரன் கையேந்திப் பெற்றுக்கொண்டான். ஒரு ஸம்வத்ஸரமாகியும் ஒன்றும் செய்யாமலிருக்கவே நிந்தையுண்டாயிற்று. அதனால் பரிஹாரம் செய்து கொள்ளக் கருதிய அவ்விந்திரன் பூமண்டலத்திற்கு வந்து

சேர்ந்து பூமியை நோக்கி இப்பாபத்தில் மூன்றிலொரு பாகத்தை நீ ஏற்றுக்கொள்ள வேணுமென்றான். அதற்கிசைந்த பூமி "என்னிடத்திலிருந்து மண்ணை வெட்டி யெடுத்தால் மறுபடியும் அந்த இடம் பூர்த்தி யடையும்படி வரம் கொடுக்கவேணும்" என்று வேண்டிக்கொள்ள, ஒருவருஷத்திற்குள் அப்படியேபூர்ணமாகக்கடவதென்று இந்திரன் வரமளித்தான். பூமி ஏற்றுக் கொண்ட பாபம் உழமண் பூமியாயிற்று. ஆதலால் அந்த இடம் அபரிசுத்தம். பிறகு இந்திரன் வநஸ்பதி தேவதையை யடைந்து தன் பாபத்தில் மூன்றிலொரு பங்கை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டி னான். "என்னை வெட்டினாலும் மறுபடியும் முன்னிலும் மதிகமாகத் தளிர்க்க வேணும்" என்று வரம் வேண்ட, அப்படியே வரமளிக்க, வ்ருக்ஷங்கள் பாபத்தில் மூன்றிலொரு பங்கை ஏற்றுக் கொண்டன. அது 'கோந்து' என்கிற பசையாக ஆயிற்று. அது அபரிசுத்தமாகையால் புஜிக்கத் தகாதது. பிறகு இந்திரன் ஸ்த்ரீகளின் திரளிலே வந்து சேஷித்துள்ள ஒரு பாப பாகத்தை ஏற்றுக்கொள்ளும்படி வேண்ட, அவர்கள் 'நாங்கள் கர்ப்பிணிகளான பின்பும் பதிபோகத்தை இழவாமலிருக்கும்படி வரமளிக்க வேணும்' என்று வேண்ட, அப்படியே வரமளித்து ப்ரஹ்மஹத்யாபாபத்தினின்றும் பூர்த்தியாக விடுபட்டான். ஸ்த்ரீகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பாபம் அவர்களு டைய மாதவிடாயாக ஆயிற்று. (இதற்குமேல்)* தஸ்மாத் மலவத்வாஸஸா ந ஸம்வ தேத ந ஸஹாஸீத* இத்யாதியாலே ரஜஸ்வலாஸ்த்ரீ நியமங்கள் பல சொல்லப் பட்டுள்ளன. அவளோடு பேசக்கூடாது, அவளோடு ஒருக்ருஹத்தில் வஸிக்கக் கூடாது. இத்யாதி. .... .... .... *

## 5. ரஜஸ்வலாஸ்த்ரீயினிடம் அன்னம் பெறலாமென்பது பற்றிய சர்ச்சை

மேலே (4ல்) விவரித்தவிடத்தில் ரஜஸ்வலாஸ்த்ரீ நியமங்கள் சொல்லி வரும்போது "நாஸ்யா அன்னமத்யாத்" என்றது. (அதாவது) பஹிஷ்டை தொட்ட (அல்லது) கொடுத்த அன்னத்தை உண்ணக்கூடாது என்றபடி. இதற்குமேல் "அதோ கல்வாஹு:" என்று பக்ஷாந்தரம் சொல்லப்படுகிறது; அஃதென்னவென் றால், "அப்யஞ்ஜநம் வாவ ஸ்த்ரியா அந்நம், அப்யஞ்ஜநமேவ ந ப்ரதிக்ருஹ்யம், காம மந்யதிதி" என்பதாக. இந்தவாக்யத்தின் பொருள் என்னவென்றால், பஹிஷ்டை யிடம் அன்னம் கொள்ளலாகாதென்றது அப்யஞ்ஜநம் [தைலஸ்நானம்] கொள்ளக் கூடாதென்கை; மற்றது இஷ்டப்படியாகலாம் என்றதாகப் பொருளாகிறது. அவளிடமிருந்து எண்ணெய் வாங்கக்கூடாதென்று சிலர்; அவள் எண்ணெய் தேய்க்கக்கூடாதென்று சிலர்—என்பதாக பட்டபாஸ்கரரும் வித்யாரண்யரும் எழுது கிறார்கள். 'அந்நம் ஸ்வேச்சாமிச்சாயம் போக்தவ்யம்" என்று வித்யாரண்ய பாஷ்ய பங்க்தி. இங்ஙனே சில அபிஜ்ஞர்கள் சொல்லுவதாக எழுதியுள்ளார். அவளோடு பேசக்கூடாது, அவளிருக்கும் க்ருஹத்திலேயே யிருக்கக்கூடாதென்று மேலே ஸ்பஷ்டமாகவுள்ளது. இது வைதிகவித்வான்கள் விமர்சிக்கவேண்டிய விஷய மென்று விடப்படுகிறது. அறிஞர் அவசியம் விமர்சித்தெழுதவேண்டும். .... *

## 6. ஆசார்ய பக்தியின் கனத்தினால் பெற்ற பலன்

அந்த இரண்டாவது காண்டத்திலேயே அந்த ஐந்தாவது ப்ரச்னத்திலேயே எட்டாவதநுவாகத்தில் ந்ருமேதன் பருச்சேபன் என்னுமிரு ரிஷிகளின் உபாக்கி

யானமொன்று ஓதப்படுகிறது. [ந்ருமேதச் ச பருச்சேபச் ச ப்ரஹ்ம வாத்யமவதேதாம்] இத்யாதி. இவ்விருமுனிவரும் நான் ப்ரஹ்மவாதியா? நீ ப்ரஹ்மவாதியா? என்று விவாதப்பட்டனர். [ந்ருமேதன் நான்தான் ப்ரஹ்மவாதி யென்கிறான், பருச்சேபன் நான்தான் ப்ரஹ்மவாதி யென்கிறான்.] இந்த விவாதம் முடிவடையவேணுமே; அதற்காக ஒரு ஈரக்கட்டையை முன்னே யெடுத்துப்போட்டு இதில் நெருப்பையுண்டாக்கவேண்டியது; யார் உண்டாக்கவல்லரோ அவரையே ப்ரஹ்மவாதியாக முடிவு செய்யவேண்டியதென்று வ்யவஸ்தை பண்ணிக்கொண்டார்கள். ந்ருமேதன் ஒரு மந்திரத்தைச் சொல்லி ஊதினான்; புகைதானுண்டாயிற்று; உடனே பருச்சேபன் ஒரு மந்திரத்தைச்சொல்லி யூதினான்; நெருப்பு எழுந்தது. பிறகு ந்ருமேதன் இவனைக் கொண்டாடிக் கூறி அப்பா! நீயும் நானும் ஒன்று சேர்ந்துதானே ஓதினோம்; நீ நெருப்பை யெழுப்பினாய், என்னால் அது முடியவில்லையே, என்னகாரணம்? என்று கேட்டான். [ஸாமிதே நீநாமேவாஹம் வர்ணம் வேதேத்யப்ரவீத்.] ........ .. .... மருமம் மஹான்களிடமுணருக. .... *

## 7. வாக்குக்கும் மனத்துக்கும் உண்டான போர்

(2-5.) பதினோராவதநுவாகத்தில் "வாக் ச மநச் சார்த்தீயேதாம்" என்று தொடங்கி வாக்குக்கும் மநஸ்ஸுக்கும் நடந்த ஒரு ஸ்பர்த்தையும் அதன் முடிவும் ஓதப்பட்டுள்ளது. தேவர்களுக்கு நான்தான் ஹவ்யம் வஹிக்கிறேனென்று வாக்கு சொல்லிற்று; மநஸ்ஸும் அப்படியே சொல்லிற்று; விவாத சாந்திக்காக ப்ரஜாபதியிடம் சென்று கேட்டபோது அவர் வாக்கைநோக்கி 'நீ மநஸ்ஸுக்கு அடிமைப் பட்டிருக்கையாலே உனக்கு ஸ்வாதந்த்ரியமில்லை; ஏனென்றால் மநஸ்ஸு நினைத்ததையே வாக்கு சொல்லக்கடவதாகையாலே' என்று மநஸ்ஸுக்கு ஏற்றமாகத் தீர்ப்புக் கூறினார். அதனால் கோபங்கொண்ட வாக்கானது 'ஹே ப்ரஜாபதே! நீர் எனக்குத் தாழ்வு சொன்னபடியாலே யாரும் உமக்கு வாக்காலே ஹோமம் செய்யக்கூடாது' என்று சொல்லிப்போயிற்று. ஆகவேதான் "ப்ரஜாபதிம் மநஸா த்யாயந் ஆகாராவாகாரயதி" என்று உபாத்யாயர்கள் சொல்லிப் போருகிறார்கள்.*

## 8. ப்ராஹ்மணனுக்கு ஏற்றங் கூறுதல்

(2-5.) அந்த அநுவாகத்தின் முடிவிலேயே ப்ராஹ்மணனுக்கு ஏற்றமாக ஓதப்பட்டுள்ளது. "யத் ப்ராஹ்மணச் ச அப்ராஹ்மணச் ச ப்ரச்நமேயாதாம்" இத்யாதி. (பொருள் வருமாறு) ஒரு ப்ராஹ்மணனும் மற்றொரு அப்ராஹ்மணனுங் கூடி ஏதேனுமொன்றுக்கு விவாதப்பட்டு ஒரு பெரியவரிடம் சென்று மாத்யஸ்த்யம் கோரி முடிவுசொல்லும்படி விரும்பினால் அப்பெரியவர் ப்ராஹ்மண பக்ஷபாதியாகவே யிருந்து முடிவுகூறவேண்டியது. [எது நியாயம் எது அநியாயம் என்கிற விமர்சத்தில் புகாமல் ப்ராஹ்மணபக்ஷமாகவே சொல்லிவிடவேண்டியது] அப்படிச் சொல்லுவதானது சொல்லுபவன் தன்னை மேன்மைப்படுத்திக் கொண்டபடியாகும். அப்படிக் கூறாமல் பிராமணனுக்குத் திரஸ்காரமாகக் கூறினால் அது கூறுபவன் தன்னைத் தானே திரஸ்கரித்துக்கொண்டபடியாகும். ஆகவே ப்ராஹ்மணனுக்குத் திரஸ்காரமாகச் சொல்லக் கடவதன்று. [சிறு குறிப்பு; * ஸ வை ப்ராஹ்மண சுர்த்தப:*

